# அகராதி நிகண்டு



மகாமகோபாத்தியாய
வே. சாமிநாதையர் நூல்நிலையம்
ன்மியூர், சென்னை-600 041
1983

P31:4K
N83
69003

# அகராதி நிகண்டு

பதிப்பாசிரியர்

டாக்டர் இரா. நாகசாமி

மகாமகோபாத்தியாய
டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம்
திருவான்மியூர், சென்னை-600 041.
1983

# அகராதி நிகண்டு

## முன்னுரை

மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் சேகரித்த பல அருந்தமிழ்ச் சுவடிகளில், 'அகராதிநிகண்டு' என்னும் பெயரில் உள்ள இச்சுவடி ஆழ்வார்திருநகரியிலிருந்து பெறப்பட்டதாகும். ஐயரவர்களது குறிப்பு "ஆழ்வார்திருநகரி தாயவலம் தீர்த்த கவிராயர் அவர்களது வீட்டு ஏட்டுப் புத்தகம் இது" என்று எழுதப்பட்டுள்ளது. இச்சுவடியில் 101 ஏடுகள் உள்ளன. ஓரிரண்டு ஏடுகள் ஒடிந்தும் இராமபாணப் பூச்சியினால் துளைக்கப்பட்டும் காணப்படுகின்றன. சுவடி முழுவதும் இருக்கிறது. ஆயினும் ஆசிரியர் "பல சொற்களை விசாரித்து எழுதவேண்டும்" என்று "இந்த அகராதி இதொரு பேதமாகச் சேர்த்திருந்ததை எழுதி வச்சிருக்குது உ நீடுழி வாழ்க உ ஏடுகள் குறையாக இருப்பது விசாரித்து எழுதவேணும்"என்று குறித்துள்ளார். ஆதலால் இந்நூலை மேலும் விரிவாக்க ஆசிரியர் கருதியிருந்தார் என்பது தெளிவு. சுவடியில் சில சொற்களுக்குப் பொருள் எழுதப்படாமல் விடப்பட்டுள்ளது. சில சொல் வர்க்கங்கள் இல்லை. பின்னர் சுவடியை வாசித்தவர் நகர வர்க்கம் இல்லை. "பகரவருக்கத்திலும் ககரம் முதலாக டகர வருக்கம் வரையிலும் இல்லை" என்று குறித்துள்ளார். இந்நிகண்டில் சுமார் 7500 மூலச் சொற்களும் மொத்தம் 22,500 க்கு மேற்பட்ட சொற்களும் இடம் பெற்றுள்ளன.

எழுத்தின் தொடக்கத்தில் "ககரம்," 'உகரம்', எனத் தனித்தலைப்பும் கொடுக்கப்பட்டுள்ளது. சொற்கள் தனித் தனியாக எழுதப்பட்டுப் பொருள்கள் கொடுக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு ஏட்டின் பக்கத்தையும் பல பகுதிகளாகப் பிரித்துக்கொண்டு சொற்கள் எழுதப்பட்டுள்ளன. இந்நிகண்டில் குற்றெழுத்து அகராதி முடிவுற்றபின் நெட்டெழுத்து அகராதி எழுதப்பட்டுள்ளது ஒரு தனிச் சிறப்பாகும்.

பொருள் எழுதும்பொழுது பொருள் முடிவுற்றது எனக்குறிக்க இறுதி எழுத்துப் பிரித்து எழுதப்பட்டுள்ளது. நெட்டெழுத்துப் பகுதியில் சில இடங்களில் இறுதி எழுத்தைப் பிரித்தும், சில இடங்களில் சுழியிட்டும் பொருள் முடிவுற்றதெனக் காட்டப்பட்டுள்ளது. நெட்டெழுத்து அகராதியில் சொல்லையும் பொருளையும் வேறுபடுத்த இடையில் கோடிடப்பட்டுள்ளது. சொற்களை எழுதும்போது முதல் எழுத்து மட்டுமல்ல, இரண்டாம் எழுத்திலும் அகர வரிசையை ஆசிரியர் பின்பற்றியுள்ளார்.

உயிர் ஈகாரம் இகரத்தில் சுழியிட்டு இ (ஈ) என எழுதப் பட்டுள்ளது. உயிர் எகர ஏகாரத்துக்கும் ஒகர ஓகாரத்துக்கும் வடிவில் வேறுபாடு இல்லை. உயிர்மெய் வடிவில் இரட்டைக் கொம்பு இடப்படவில்லை. சில எழுத்துக்கள் ஒன்றுக்கு ஒன்ருகப் பிறழ்ந்து காணப்படுகின்றன.

| | |
|---|---|
| ன—ந (உ-ம்) | சென்ஞய்-செந்நாய் |
| ன—ண | துன் ஞு-துண் ஞு |
| ற—ர | சக்கிருயுதம்-சக்கிராயுதம் |
| ழ—ள | பிழிறல்-பிளிறல் |
| ல—ள | துலக்கம்-துளக்கம் |

முதலியன இவ்வாறு காணப்படுகின்றன. இவை அவ் வட்டார எழுத்து மரபாக இருக்கலாம். சில சொற்கள் திரிந்தும் காணப்படுகின்றன. (உ-ம்) பிருத்தி—பிராப்தி. எழுதும் பிழையால் ஓரிரு எழுத்துக்கள் விடப்பட்டுள்ளன. குடி-மருத நிலத்தூர்க் கொடிகள்-மருதநிலத்தூர்குடிகள். இங்குக் குடிகள் என்னும் சொல் கொடிகள் எனத் திரிந்து வந்தது. இப்படி வருவது இந்நூலாசிரியரின் காலப் பேச்சு வழக்கைக் குறிக்கலாம். இது போன்று பிறழ்ந்துள்ள சொற்களும் அவற்றின் திருந்திய வடிவமும் வருமாறு :

| சுவடியில் உள்ளது. | | செஞ்சொல். | | பொருள். |
|---|---|---|---|---|
| குப்பாவம் | — | குப்பாயம் | — | சட்டை |
| கொலம் | — | கோலம் | — | நீரோட்டம் |
| கொறன் | — | கோற்றேன் | — | தேன்கூடு |

| | | |
|---|---|---|
| சல்லி — | சில்லி | — வடம், கீரை, தேருருள், கீழ் வீடு. |
| சலிகம் — | சலீகம் | — பூசல் |

சொற்களின் தொடக்கத்தில் ஒரு எழுத்து விடப்பட்டுப் பொருள் எழுதப்பட்டுள்ள சொற்களுக்கு உதாரணம்:—

தீசி-உதீசி-வடதிசை
துகம்-மதுகம்-தரா
தும்பரம்-உதும்பரம்-செம்பு.

சி என்னும் எழுத்து தி என்று மாறி வந்ததற்கு உதாரணம்.

தேசி-தேதி-நாய்.
குறில் நெடிலாக மாற்றம் பெற்றதற்கு உதாரணம்
தொகம்-தோகம்-அற்பம்.
தெறுக்கால்-தேறுக்கால்-தேள்
நெடில் குறிலாக மாறியதற்கு உதாரணம்.
மோத்தை-மொத்தை-வெள்ளாட்டேறு

ஆங்காரம்-மகிதை. இங்கு மமதை என்னும் பொருள் மகிதை எனத் திரிந்தது. நாமதீப நிகண்டில் காணப்படும் வீதா என்னும் சொல் இவ்வகராதி நிகண்டில் பிதா என்று வந்துள்ளது.

வகர பகர பேதங்களுக்கு உதாரணம்
விதி-பிதி-குணம்.
விருச்சிகன்-பிருச்சிகன்-ஆதித்தன்

அனங்கம்-இருவாட்சி. இச்சொல்லில் 'அ' என்னும் எழுத்து மகர அகரமாக மனங்கம்-இருவாட்சி என்று வந்துள்ளது,

பகர இகரம் மகர இகரமாகப் பிழைபடத் திரிந்ததற்கு உதாரணம்:—

பின்னம் - மின்னம் - வேறுபாடு. சிவன் என்ற சொல்லுக்கு விட்டுணு எனப் பொருள் தந்துள்ளார் இந் நூலாசிரியர். புத்தன் என்ற சொல்லுக்கு நெடுமால் எனப் பொருள் கொண்டுள்ளார் ஆசிரியர். திருமாலின் பத்து

அவதாரங்களில் புத்தாவதாரம் ஒன்று எனப் பாகவதம் கூறுகிறது. நான் என்னும் சொல் ஆங்காரம் என்ற பொருளில் இந்நிகண்டில் வந்துள்ளது. நான் என்னும் சொல்லுக்குத் தன்மை ஒருமைப் பெயர் என்று இலக்கண வழக்கில் தமிழ் அகராதி தொகுதி 4இல் பொருள் தரப் பட்டுள்ளது. இந்த அகராதி நிகண்டின் ஆசிரியர் 'நான்-ஆங்காரம்' என்று தத்துவ வழக்கில் பொருள் தந்துள்ளார். கோசம் என்ற சொல் உறை என்று பொருள் தரும். இதில் ''உ'' என்ற எழுத்தை மகர உகரமாக்கி முறை என்று பொருள் தந்துள்ளார் இந்நூலாசிரியர். கோசிகம் என்ற சொல் சாம வேதம் என்ற பொருளைத் தருகிறது. இச் சொல்லுக்கு ஏட்டுச் சுவடியில் காம நூல் எனப் பொருள் எழுதப்பட்டுள்ளது. இப்பொருள் பிழையுடையது. சாம நூல் என்று வருவதற்கு மாருகக் காம நூல் என்று தவருக எழுதப்பட்டுள்ளதோ என்று தோன்றுகிறது. ககர ஓகார வருக்கத்தில் 'கோமாயு' என்ற சொல்லுக்கு 'நரி' எனப் பொருள் எழுதப்பட்டுள்ளது. மகர ஆகார வருக்கத்தில் மாயு என்ற சொல் நரி என்ற பொருளில் வந்துள்ளது. மடு-குளம், பசுவின் முலை எனப் பொருள் தரப்பட்டுள்ளது. மடி என்ற சொல்லின் பொருள் பசுவின் முலையாகும். சக்கரம் என்ற சொல்லுக்குத் துயிலொழிதல் என்று பொருள் தரப்பட்டுள்ளது. சாக்கிரம் என்ற சொல்லே துயிலொழிதல் என்ற பொருள் தருவதாகும். தமனியம் என்ற சொல்லுக்குப் பொன் என்பது பொருளாகும். இப்பொருளுடன் பிரமா என்றபொருளும் இச்சொல்லுக்குத் தரப்பட்டுள்ளது. இது குணத்தையும் குணத்தை உடைய குணியையும் ஒன்ருகப் பொருள் கொண்டுள்ளமைக்கு எடுத்துக்காட்டாகும். தேகம் என்ற சொல்லுக்கு உடம்பு என்ற பொருளுடன் ஐயம் என்ற பொருளும் இந்நிகண்டில் காணப்படுகிறது. சந்தேகம் என்ற சொல்லுக்கு உரிய 'ஐயம்' என்ற பொருளையே தேகம் என்ற சொல்லுக்கு இந்நூலாசிரியர் கொண்டுள்ளார் என்று தோன்றுகிறது. மித்திரர் என்ற சொல்லுக்கு எதிர்ப்பதமாகிய சத்துரு என்ற சொல்லையே பொருளாக இந்நூலில் கொடுக்கப் பட்டுள்ளது. பந்து என்ற சொல் பெந்து என்று வருவது போன்று தமரம் என்ற சொல் தெமரம் என்று இந் நிகண்டில் எழுதப்பட்டுள்ளது.

கால வழக்கையும் வட்டார வழக்கையும் அறிந்து கொள்ளப் பெரும்பாலும் சொற்களும் பொருள்களும் சுவடியில் உள்ளவாறே இங்குப் பதிப்பிக்கப்பட்டுள்ளன. தெளிவு பெறும் வகையில் அடைப்புக் குறியீடுகள் கீழ்வருமாறு பயன்படுத்தியுள்ளேன்.

[ ] செல்லரிக்கப்பட்ட இடங்களில் எழுத்துக்கள் சேர்க்கப்பட்டவை.

[ * ] எழுதும்போது விடப்பட்டுப் பதிப்பாசிரியரால் சேர்க்கப்பட்டவை.

( ) சுவடியில் உள்ளன. ஆனால் நீக்கப்படவேண்டியவை.

இந்நிகண்டைத் தொகுத்த ஆசிரியர் பெயர் தெரியவில்லை. சதுரகராதி போன்ற நூல்கள் தோன்றியபிறகு இவ்வகராதியை ஆசிரியர் தொகுத்திருக்க வேண்டும். ஏனெனில் சொல்லின் முதல் எழுத்து மட்டுமல்ல, இரண்டாவது எழுத்தையும் அகரவரிசைப் படுத்தி எழுதியுள்ளமை இதைச் சுட்டும். ஆதலின் இது 19ஆம் நூற்றாண்டில் தொகுக்கப்பட்ட நூல் எனலாம். அகராதி தொகுக்கும் பணி தொடர்ந்து நம் ஆன்றோர்களால் பின்பற்றப்பட்டது என்பதற்கு இது ஒரு எடுத்துக்காட்டு எனலாம். இதுகாறும் இது அச்சிடப்படவில்லை. 1958ஆம் ஆண்டு சாமிநாதையர் நூலகத்தாரால் படி எடுக்கப்பட்டுள்ளது. படியெடுத்தவர் இந்நூலகத்தில் பணியாற்றிய எம். வரதன் என்பவர் ஆவார்.

ஐயரவர்கள் நூல் நிலைய வெளியீடான சுவடிகளின் விளக்கம் முதல் தொகுதியில் இச்சுவடியின் தொடர் எண் 368 என்று அச்சிடப்பட்டுள்ளது. இந்நூல் சிதம்பரம் ரேவணசித்தர் எழுதிய அகராதி நிகண்டினின்றும் வேறானது.

இந்நூலை ஆய்ந்து பதிப்பிக்கும் பணியில் திருவாளர்கள் எஸ். சாயிராமன், எஸ். விஸ்வேஸ்வரன், N. பாபு ஆகியோர் பெரிதும் உதவியுள்ளனர். பதிப்புக்கு உரிய வகையில் படி எடுத்தளித்தவர் நூலகர் செல்வி. முத்துலக்ஷ்மி. இவர்கள் பாராட்டுக்கு உரியவர்கள். நூலை அழகுற திரு. ராஜன் கம்பெனியார் அச்சிட்டுள்ளனர். அவர்களுக்கும் எமது நன்றி.

இரா. நாகசாமி.

# AKARATI NIGANDU.

Preserved in a single palm leaf manuscript, the present work was originally in the collection of Tayavalam tirtha Kavirayar family of Alvarthirunagari, later collected by Dr. U. V. Swaminatha Iyer and is now in the collection of Dr. U. V. Swaminatha Iyer Library.

There are altogether 101 leaves in the bundle. The Mss is complete though one or two leaves are broken and a considerable number damaged by worms. It is a word to word dictionary arranged in alphabetical order modelled on the dictionaries of the west, with the difference, that the words beginning with short vowels are given first and the ones beginning with long vowels given later. The compiler has left a note that "more words and their meanings should be compiled from the learned public". For a few words the meanings are not given. The author ought to have thought of noting them later after enquiry. The name of the author is however not known.

The dictionary gives meanings for about 7500 words, the total number of words compiled being over 22,500.

In the traditional Nigantus, composed in metrical form, the alphabetical order is confined to the first letter only, but in this compilation attention has been paid to the second letter as well. Obviously the work should have been composed after the model of "Caturakaradi" etc, compiled by the European missionaries. Though the exact date of the compilation is not known, it seems to be a work of the 19th Cent. AD.

In editing and seeing the work through the press, Thiru S. Sairaman of Dr. U. V. Swaminatha Iyer Library Thiru S. Visweswaran and my son N. Babu rendered great assistance and their services are acknowledged with grateful thanks. Selvi S. Muthulakshmi, the Librarian of Dr. U. V. Swaminatha Iyer Library deserves thanks for preparing a clean copy for the press. Messers Rajan & Co., have done a good job of printing and I record my appreciation of their work. The book is printed and published with a generous grant from the Ministry of Culture, Government of India.

Under the personal supervision and direction of Smt. Rukmanidevi of Kalakshetra, the adhyaksha of the U. V. S. Library and with the active assistance of Sri K. Subrahmanya Iyer, the treasurer (who is the grandson of Dr. U. V. Swaminatha Iyer) the Library is contininig to do useful service to the cause of ancient Literature.

**R. Nagaswamy**

# அகராதி நிகண்டு

## அகரம்

அகமுனி-ஆழ்வார்கள், அகத்தியன்.

அகலுள்-ஊர், நாடு, மார்பு, விரித்துரை, அகலம், பெருமை, அகப்பால், சிவன்.

அகளம்-தாழி, மிடா, போர்க்களம்,

அகளங்கன் - களங்கமில்லாதவன்.

அக்கு-கண், வெறுப்பு, சங்குமணி, எலும்பு, பலகறை, சாரிகைச்சொல், விடைமுதிப்பு, (எருத்துதிமில்)

அக்கம்-கண், நெல்லு, கயிறு.

அக்குரன் - இடைவள்ளல், உழவு.

அகலம்-மார்பு, பெருமை.

அகிஞ்சனன்-தரித்திரன்.

அகம்-மலை, வீடு, மனம், உள்ளம்.

அரவம்-இடப்பெயர், உயிர்.

அஃகுலி-அப்பம், சிற்றுண்டியான தின்பண்டம்.

அஃகல்-குறைதல், சுருங்கல்.

அகல்-மண்கலம், நீங்கல்.

அகழ்-அகழி, ஆழம், தோண்டுதல், கோட்டைப்பதனம் (மதில்சூழ் கிடங்கு).

அதள்-தோல்.

அகலிடம்-பூமி.

அகரு-அகில்.

அக்கி-கண்.

அகனத்தம்-செங்கழுநீர்.

அகலியம்-மரப் பொதுப்பெயர்.

அகண்-ஆதுலர்.

அக்காரம்-சர்க்கரை, ஆடை.

அகரல்-அகலம்.

அகணி-வயல், மருதநிலம், உள்ளிடம், மடல்களின் உள்ளிடம்.

அகரம்-ஊர், எழுத்து.

அகாரம்-பாலையாழ், அகரவெழுத்து.

அகப்பா-அகழ், அரண், பரிகை, (மதிலுள் மேடை) கோட்டைப்பதனம்.

அகத்தி-அச்சுதம், அத்திமரம், அகத்தி.

அகாரர்-செட்டியள்

அக்கரம்-காலம், எழுத்து, வியாதிமுத்தி.

அக்கரை-எதிர்க்கரை.

அக்கசாலையர்-கண்ணாளர், தட்டார்:

அகக்காழ்-கருங்காலி முதலாயின இனமரம்.

அகழி-அத......

அகம்-உள்ளிடம். ... பாவம்.

அநற்றல்-தாண்டல், நீக்கல்.

அகிலமுகம்-தண்ணீர்.

அகுர்-ஆகாயம்

அகமலர்ச்சி-ஆனந்தமாகிய பேரின்பம்.

அகன்-மணி.

அகடு-உள்ளிடம்.
அகவல்-ஆசிரியப்பா, ஓசை வினவியழைத்தல், மயிற் குரல், ஆடல்.
அகமார்க்கம் - அருமையிற் பாட்டுக் கூத்து,
அமைத்து-தரைத்தல், தாழ்தல், வருத்தல், அடித்தல், அறுத்தல், இறத்தல், வேதனை ஒழிதல்.
அகளங்கமூர்த்தி - புத்தக் கடவுள், சோழன், அழுக் கற்றோன்.
அகடு-வயிறு, நடு, பொல்லாங்கு, வேந்து.
அகி-பாம்பு, இரும்பு, விருத்திராசுரன், புக்கு, கருடன். மயில்.
அகிலம்-பூமி முழுவதும்.
அக்கோ-அதிசயம்.
அகைத்தல்-எழுச்சி, செலுத்தல், வேதனை.
அகலை-ஆடல்.
அங்கதம்-பொய், தோள்வளை, அரவு, அசைச்சொல், மார்பு, ஒரு பாட்டு.
அங்கணம் - சேறுமுற்றம், சலதாரை, பொல்லா நிலம்.
அங்கம்-தேகம், தேகத்துறுப்பு, எலும்பு (சேறு).
அங்கிதம்-உடற்றழும்பு, ஆனைக் கால்.
அங்கி-சட்டை, நெருப்பு, கார்த்திகை நாள்.
அங்காரகம்-நெருப்பு, பூசுவன.
அங்காரகன்-செவ்வாய், அக்கினி.
அங்குரம்-ஆகாயம், முளை.
அங்குரித்தல்-முளைத்தல்.
அங்கல்-பொலிவு, இரங்கல், கேடு.
அங்கோலம்-அழிஞ்சின்மரம்.
அங்குசபாசன்-கணபதி
அங்காடி-கடை.
அங்குசம்-தண்ணீர், ஆனைத் துரோட்டி.
அங்கு-அவ்விடம்.
அங்குலி-விரல்.
அங்குல்-ஆகாயம், அணிவிரல்.
அங்கனை-பெண்
அங்கை-அகங்கை, கங்கை.
அங்கசன்-காமன்.
அங்கிரி-பாதம்.
அங்கவடி-குதிரைப்படி
அச்சு-மங்கலாதனம், தேரச்சு, ஆணி.
அச்சம்-பயம், அகத்தி, (ஐமை) அஞ்சலி.
அசறு-சேறு.
அ - - - -கூத்து, ஓசை, கேடு.
அசனம்-சோறு, அஞ்சனம், பட்டினி.
அச்சுதன்-மாயன், அழிவில்லாதவன், பலபத்திரர், வெள்ளரிசி, அறுகு கூட்டியணிவது.
அசைதல்-அமைதல், நோதல், தங்கல், சோம்பு, எட்டுதல், கட்டுதல்.
அசனி-இடி, வச்சிராயுதம்.
அசவுதல்-அழைத்தல்.
அசமம்-மயக்கம்.
அசும்-புகுவையாடு, நெல், மூவாட்டை, ஆடு.
அசர்-துக்கம், பூசாபூசல், தளர்ச்சி.
அசஞ்சலன்-சஞ்சலமில்லாதவன்.

அசலை-பூமி, சோம்பு.
அசம்பு-கிணறு, ஊற்றுறல், ஊறல்.
அசுரர்-இராக்கதர்.
அசுத்தம்-சுத்தமல்லாதது
அசுமம்-நாய்.
அசைப்பு-சொல்.
அசை-நிலைச்சொல், அசைதல், சோம்பு.
அசைவு-மந்திரம்,இயங்கல்.
அசலம்-மலை.
அசிகம்-அம்பு.
அசிதம்-கறுத்த நிறம்.
அசி-படைக்கலம், வாள், அவமதிச் சிரிப்பு, பாம்பு, நெருப்பு.
அச்சுவம்-குதிரை, அரசமரம்.
அச்சோ-அதிசயம்.
அசைத்தல்-கட்டுதல்.
அசித்தல்-உண்டல்.
அசு-பாகம், சகதி.
அசேதம்-அறிவின்மை.
அசோகு-பிண்டிமரம்.
அசதி-நகைச் சொல், துட்டை.
அசோகுடைச் செல்வன் - புத்தன்.
அஞ்சிறை-அழகிய சிறை.
அசுரநான்-மூலம்.
அசுணம்-பெரும்பாம்பு, கேகயப்புள்ளு.
அஞ்சனம்-ஆனை, கண்மருந்து, டி அண்...ண...ம்.
அஞ்சலி-காயாமரம்.
அஞர்-நோய், அச்சம், துன்பம், அறிவு.
அஞ்சி-மாதா.
அஞ்சலி-தொழுதல், பரவல்.
அஞ்சலிகை-தேனீ.
அஞ்ஞை-பேதை, அறிவிலோர்.
அஞ்சா-நகாயுதம், சிங்கம்.
அஞலம்-வளம்பெறும் பறவை.
அஞ்சனம்-மை, கறுப்பு, திக்கயத் தொன்று.
அட்டமாநாகம்-வாசுகி, அனந்தன், பற்பநாபன், கார்க்கோடகன், தனஞ்செயன், அட்டமாகுளியன், சங்கபாலன், தக்கன் ஆக 8.
அட்டதிக்குப் பாலர், இந்திரன், அங்கி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் ஆக 8.
அட்டமங்கலம்-கவரி, நிறைகுடம், கண்ணாடி, தோட்டி, முரசு, விளக்கு பதாகை இணைக்கயல் ஆக 8.
அட்டமூர்த்தி-பார், நீர், தேயு, வாயு, ஆகாயம், சூரியன், இந்து இயமானென்றிவையே ஆக 8.
அட்டமாசித்தி-அணிமா,மகிமா, லகிமா, கரிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் ஆக 8
அடக்கம்-ஒழுக்கம், ஒடுங்குதல்.
அடர்-ஐமை, தகடு, நெருக்கம், பொல்லாங்கு, வெற்றி, மங்கட் கூட்டம்.
அடங்கல்-பகைவர், முழுவதும், ஒடுக்கம்,
அடங்கர்-தண்ணீர்ச்சால்.
அடலை-சாம்பல், பூசல்.
அடிகால்-அடித்தல், ஆதி.
அடிமை-உரிமை, தொண்டு.
அடப்படு-புழுங்கல்.
அடம்பு-பாலிகை.
அடிசில்-சோறு.
அடவி-காடு.

அடிகள்-சுவாமி, மூத்தோர், தலைவி, அடியிற்றொடுவது, பாதுகம்.
அடல்-வெற்றி, ஆயும், வேதனை, பூசல், வலி.
அட்டகயமாவது - அயிராபதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புட்பதந்தம், சார்வபூமம், சுப்பிரதீபம்... ஆக 8.
அடுப்பு-பரணி நாள், அச்சம், சுல்லி.
அடும்பு-அச்சம், சாம்பல், அப்பம்.
அடு-கோறல்.
அடுத்தல்-கூடுதல், கொலை செய்தல்,
அடிச்சேரி-அடிக்குடில்
அடைய-முழுதும்
அடுக்கல்-மலை.
அடை—இலை, நெருக்கம், அப்பப் பணியாரம் சும்மாடு கனம்.
அடைவு-முறைமையாடல்.
அடைச்சல்-பெருகுதல்.
அடைந்தவர் - பந்துக்கள், அடைக்கலம் புகுந்தோர்.
அடையார்-சத்துருக்கள்.
அட்டை-குறைத்தலை, அட்டை, பேய்.
அட்டில்-அடுக்களை.
அடன்-நஞ்சு.
அட்டி-செஞ்சந்தனம்
அடகு-இலைக்கறி.
அட்டல்-கோறல்.
அணங்கு - தெய்வம், மாதர், வெறியாட்டு, வேலனுடல், மையல், நோய், வருத்தம், கொலை, மூதேவி, ஆட்டுமறி, அழகு.
அணி-படை வகுத்தல், அழகு, பெருமை, நிரை, நெற்றிப் படை, ஆபரணம், பிற் படை.
அண்ணல்-தலைமை, பெருமை, அணுகல், சிவன், சிறந்தோர் முல்லைத் தலைவன், அருகக் கடவுள், புத்தக் கடவுள், இராசா.
அணிமா - அட்டமா சித்தியிலொன்று.
அண்டம்-ஆகாயம், முட்டை, புழுகு, சட்டம், காக்கை.
அண்டசம்-அரவு, தவளை, முதலை, மீன், ஆமை, உடும்பு, பொத்திருப்பி, பறவை, பல்லி.
அண்டர்-தேவர், இடையர், பகைவர், அண்டயோனி, ஆதித்தன்.
அண்டகை-அப்பப் பணியாரம்,
அண்டம்-மடம், உறைதல்.
அணவல்-அடுத்தல், அடுதல், புல்லல்.
அணல்-மேல்வாய், ஏந்துதல் மிடறு, கீழ்வாய்ப்புறம்.
அனரி-அண்ணு.
அண்ணம்-அண்ணு, கீழ்வாய்ப் புறம், உண்ணுக்கு.
அணவுதல்-சார்தல்.
அண-பூமம்.
அண்மி-பொருந்தல்.
அணவால்-எட்டுதல்.
அணிமை-பிறவி.
அண்டங்காக்கை-காக்கையில் விகற்பம்.
அண்ணே-பேய், அறிவிலோர், வாவி.
அணு-வழி, புதன்.

அணியல்-மாலை, ஒப்பித்தல்.
அணு-சிறுமை, ஆன்மா.
அணிகலம்-ஆபரணம்.
அணை-புனற்கரை, மெத்தை, கூடுதல்.
அணிகம்-தண்டிகை.
அணுக்கர்-சருவேசரனை விட்டு நீங்காமை.
அதிர்ப்பு-ஒலி, நடுக்கம்.
அத்திரம்-அம்பு, விடுபடை.
அதிர்த்திடல்-உரப்பல்.
அதிரல்-ஒலி, தூறுன செடி.
அதிர்ச்சி-ஆரவாரம்.
அதமில்லென்றல்-சாதல்.
அதரில்-நுண்மணல்.
அதிர்வை-கரி.
அத்தியாய்-மது.
அதந்தீவாம்-நாவிலாமை.
அதங்குதல்-சுழித்தல்.
அதரம்-உதடு, கீழ்உதடு.
அத்தியானம்-வாசித்தல்.
அத்தாணி-அரசிருக்கை.
அத்தை-மூத்தோர்கள், மாமி, தலைவி, ஊமத்தை, அத்தியர், அததியர்.
அத்தன்-புத்தக் கடவுள், பிதா
அதட்டல்-உரப்பிச்சொல்லுதல்
அத்தீபம்-ஆனை.
அதிதம்-மோர்.
அதள்-தோல்.
அதட்டம்-சற்பத்தின் பல்.
அதம்-அத்திமரம்.
அதவம்-அத்திமரம்.
அதவுகை-நெடுங்குகை
அதவு-உதும்பரம், அத்திமரம்.
அதோமுகம் - கடற்கழி, முகத்துவாரம்.
அதர்-நுண்மணல், வழி.
அதிங்கம்-அதிமதுரம்
அத்தோ-அதிசெயம்.
அத்தி-பிரம அவிராபதம்.
அத்திகை-குதிரை.
அத்திநாள்-புனர்ப்பூசம்
அத்து- சாரியைச் சொல், செம்மை, வரைநாள், இசைப்பு.
அத்தவாளம்-உத்தரீகம்.
அத்தம்-பொன், கை, நாள், நடவை, காடு, பாதி, மறைதல், வழி, உள்ள-கழிப்பு, அரியநெறி, கண்ணுடி, வாகு, வலையம், மருந்தின் பொதுப் பெயர்.
அத்தநாள்-பாதிநாள், நக்ஷத்திரம்.
அதக்கம்-செம்பஞ்சு.
அத்தி-ஆனை, எலும்பு, மரம், கடல், கட்டல், புதியவர்.
அத்தினி-பிடியானை (பெண்யானை).
அத்திரி-குதிரை, கழுதை, மலை, ஒருமூலி, ஒட்டகம், உலைத்துருத்தி.
அதிகம்-திரள், படை, மிகுதி, பொலிவு, இலாபம்.
அதிரேகம்-அதிகம்.
அது-ஆறும் வேற்றுமை உருபு.
அதிகாரம்-பனுவல்
அந்தம்-கத்தூரி, ஈறு, அழகு, பொன், விண், முடிவிலாமை.
அந்திகை-கிளி.
அந்தகன்-நமன், குருடன்.
அந்தகாரம்-இருட்டு, நரகம்.
அந்தராயம்-தீது.
அந்தித்தல்-பொருந்தல்.
அந்திரித்தல்-கவளீகரித்தல்.
அந்தரி-துர்க்கை, உமை.

அந்த-கீழ்த்திக்கு, அந்தட்டுக் கிழக்கு.

அந்தோ-அதிசெயம்.

அந்தரநாதன்-இந்திரன்.

அந்தரம்-ஆகாயம், முடிவு, பேதம்.

அந்தி - வண்ணவன், சிவன், அசைநிலை, அலகு, மூச்சந்தி.

அந்தி-சந்தியாகாலம்.

அந்தாரம்-குறிஞ்சியிராகம், அந்தாளி இராகம்.

அந்தணர் அறு தொழிலாவது-ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல்.

அந்தாமம் - அழகிய மாலை வைகுந்தம்.

அந்தராளன்-நாலுவங்கியத்து முறையிலும் முறைமாறிப் பிறந்த பிள்ளையள்; (பெற்ற பிள்ளையள்) பேர்.

அந்தப்புரம்-இராசபத்தினி இருப்பிடம்.

அப்பம்-சிற்றுண்டி.

அப்பன்-பிதா.

அபரிமிதம்-அளவிறந்தது.

அபாயம்-வஞ்சனை.

அபாரம்-அளவிறந்தது.

அபாங்கம்-கடைக்கணித்தல்.

அபங்கன்-பங்கமில்லாதவன்.

அபரம்-முதுகு, ஆபத்து, வீண்.

அப்பு-தண்ணீர்.

அபையம்-பொழுது, முறையிடுதல்.

அபையன்-சோழன், பயமில்லாதவன்.

அபையர்-வீரர்.

அபேதம்-பேதமில்லாமை.

அபிதானம்-அலைத்துப் பூசுவன, மேல்வரும் பிறப்பு.

அபூபம்-அப்பம்.

அபிமானம்-உள்ளக்களிப்பு.

அம்பரம்-ஆகாயம், கூறை, கடல், திசை.

அம்புவில்-எலுமிச்சமரம்.

அம்பி-அம்மி, மாசு, அகலம், வெள்ளியம், மரக்கலம், நீர் மேலோடுவன வெல்லாந் தெப்பம்.

அம்பு-நீர் பாணம் மூங்கில், மிடவாசை.

அம்மான்-அப்பன்.

அம்மை-மூலை, தாய், அழகு, தனம், தேவதை, பத்திர காளி, கருத்து.

அம்பொதி - புட்டில், தற் கோலம், குடை, வேல்முள்.

அமைதி-மாட்சிமை.

அமைவு-மூங்கில், நிறைவு, காலம், பொருந்தல்.

அம்பணம்-மரக்கலம், துலாக் கோல், தூம்புவாய்.

அம்பகன்-எமன், கணமாலை.

அம்பல்-ஆம்பதிமொழி, சிலரறிந்து பகர்தல்.

அம்பம்-மதம், விழவு, நீர்வெளி, சேது, குதிரை.

அம்பல்-பழிமொழி, புறங் கூறல்.

அமரல்-மிகுதி, பொலிவு.

அம்மே-சாரியைச்சொல்.

அமுதம்-தண்ணீர்.

அமங்கலை-கலன்கழி மகளிர்.

அம்பணத்தி-துர்க்கை, துட்டி.

அம்-அழகு, நீர், சாரியைச்சொல்

அம்மா-அசைச்சொல், துக்கம், தாய்.

அம்பணவர்-ஒரு சாதி.
அம்மணம்-நிர்வாணம், தும்பு
அம்பியம்-கள்ளு, தெப்பம்.
அம்பி-தோணி, நாவாய்.
அம்பணம் - ஆசை, பற்றுக்கோடு.
அம்பிலி-வாச்சியம்.
அம்பலம்-இரதம்.
அமானம்-அளவிறந்தது.
அம்பிகை-பார்வதி.
அம்பாலிகை - அருகனை முடிதரித்தவள்.
அம்போதி-கடல்.
அம்புலி-சந்திரன்.
அம்மனே-மாதா.
அம்புராசி-கடல்.
அமலம்-அழுக்கின்மை.
அமரர்-தேவர்.
அமரர்-சத்துருக்கள்.
அமர்-பூசல், ஒப்பு.
அமருதல்-பொருந்துதல்.
அமைதல் - சம்மதித்தல், நிறைதல், மாட்சி.
அமைச்சன்-வியாழம்.
அமண்டலம்-செண்டு, வெளி.
அமரி-துர்க்கை, அமுதம்.
அயினி-சோறு.
அயின்றுள்-தாய்.
அமிழ்து-மழை, பழனம், அமுதம்.
அமாத்தியர்-மந்திரிகள்.
அம்மென-பாட்டே ஆடற்கேற்பன.
அம்மெனல்-அனுகரண ஓசை.
அமுதகிரணன்-சந்திரன்.
அமுதாசனர்-தேவர்.
அமுதர்-தேவர்கள்.
அமையம்-பகற்பொழுது.
அம்மம்-முலை.
அமுதவல்லி-சீந்தில் தண்டு.
அம்புயம்-தாமரை.
அம்போருகம்-தாமரை.
அம்புதம்-தாமரை.
அம்பருலகு-தேவலோகம்.
அமளி-துயிலிடம்.
அமலை-சோறுமிகுதி, பெருஞ்சோற்றுக்கட்டி.
அமுது-தெய்வ உணவு.
அமுதம்-இனிமை.
அமுதம்-சுவைநீர்.
அமோகர்-சித்திரக்காரர்.
அமுகர்-இடையர்.
அயர்வு-வேட்கை, பெருக்கம், வருத்தம், அகலம், மயக்கம், அச்சம், அறிவிலோர்கள், உயர்திணை, கிடக்கைத்தலம்.
அயன் - பிரமன், அருகன், சோமன்.
அயமாருத-இரும்பு, நாடகம், ஆண்டிற்பாதி, வாழி.
அயவாகனன்-அங்கி.
அய்யர்-துறவோர், அமரர், தேவர், பிராமணன்.
அய்யன்-சாத்தன், பிதா, மூத்தோர்.
அயிராணி-பார்வதி, இந்திராணி.
அயிர்ப்பு-குறிஞ்சியாழ்.
அயிர்-நுண்மணல், நுண்மை, கண்டஞ்சர்க்கரை.
அயனம்-வியாபாரித்தல்.
அயிறல்-பக்கித்தல், பருகல்.
அயிற்றல்-சந்தேகித்தல்.
அயில்-வேல், கூர்மை, அழகு, கண்.
அயிலான்-சுப்பிரமணியன்.
அயர்-வருத்தம் தீர்தல், துன்பம், மயக்கம் செய்தல்.

அயில்-உழுவர், வீரர்.
அயனம்-வழி, ஆண்டிற்பாதி.
அயினி-சோறு.
அயின்றல்-பக்கித்தல்.
அயலவர்-அயலோர்.
அயோத்தி-நகர்சாதேவிர மென்று பெயர்.
அரசிருப்பிடம்-அத்தாணி, அரசன் தேவி இருப்பிடம், கந்தவாரம்.
அரக்காம்பல்-செங்குமுதம்.
அரன்-சிவன், எல்லாமுடையோன்.
அரத்தன்-செவ்வாய்.
அரல்-விரித்தல், மணல்.
அரங்கல்-அழுங்குதல்.
அரத்தம்-செங்கழுநீர், பவளம்.
அரக்கு-சிவப்பு, இரத்தம், கடம்பு.
அரலை-கழலை, புல்வாய், அருங்கனிக்காழ்.
அரவு-வசை, பாம்பு, ஒன்று, ஆயிலியம்.
அரக்கு-உதிரம், பொன், மெழுகு.
அரக்குதல்-கீழ்தல்.
அரம்பை-வாழை, தெய்வ மகளிர்.
அரணம்-செருப்பு, கத்தளம், இல்லாமை, பூசல், திரன், காடு, கவசம், மதின்வேலி.
அரவம்-ஒலி, பாம்பு, நெல்லி, குங்கலியம். அரசர்க்கு நட்பாளர், பிராமணர், நூபுரம், படைத்தொழிலார், ஐம்பெருஞ்சுற்றம், மருத்துவர், சோதிடர்.
அரசு-மரம், இராசர்.
அரசாறு-தொழில், ஓதல், வேட்டல், ஈதல், பார்புரத்தல், உயிரோம்பல், படைக்கலங் கற்றல்.
அரசன்-வியாழன், இராசர், எல்லாம் உடையோன்.
அரசியல்-படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண்ஆறே.
அரதனம்-தெய்வப்பெண், மணிப்பொதுப் பேர்.
அரசற்கைம்பெருங்குழு-மந்திரி, புரோகிதன், சேனுபதி, தூதர், சாரணர்.
அரசற்கெண்பேராயம்-கருமவிதிகாரர், படைத்தலைவர், மந்திரி, சுற்றம், யானைவீரர் கடைகாப்பாளர், இவுளி மறவர், நகரமாக்கள்.
அராகம்-கோபம், யாழ், கலிப்பா, சிவப்பு.
அரணியம்-காடு.
அரமகளிர்-தெய்வப்பெண்.
அரணி-தீக்கடைக் கோல்.
அரண்-கோட்டை, செறிவு, காவல்.
அரம்-பாதாளம், இரும்புக் கருவி, வெள்ளைநிறம்.
அரணித்தல்-அலங்கரித்தல்.
அரவிந்தம்-தாமரை.
அரசுநிழலிருந்தோன்-புத்தக் கடவுள்.
அரந்தை-துறக்கம், பிரகாசம்.
அரற்றல்-கலித்தல்.
அரட்டர்-கடிகை, குறுநில மன்னர்.
அரங்கு-நாகு, இடம்.
அரமியம்-நிலாமுற்றம்.
அரவன்-சிவன்.

அரங்கம்- ஆற்றிடைக் குறை, ஆயுதம், சூது, கூத்துப் பயிலிடம்.
அரி - நாராயணன், பொன். பகை, கண்ணில் வரி, தெப்பம், விசிப்பு, காற்று, வரி, நெருப்பு, குதிரை, கடல், பொன்மை நிறம், தண்ணீர், இந்திரன், அண்டம். அசோகு, வயிரமரம், வயிரம், விரை, ஈர்வாள், கூற்றுவன், புகை, கட்டில், மரகதமணி, சிங்கராசி, சிங்கம், பாம்பு, வண்டு, இருசுடர், சிலம்பிற்பெய்தபரல், குரங்கு, கூர்மை, கோ, புகர், வலி, பூமி, இராசா, கற்பகத் தரு, அம்பு, திக்கு, சுவர்க்கம், நெற்கதிர், மூங்கில், சோலை, படைக்கலம், சக்கரம், அரிசி, எறிபறை, காந்தி, ஐமை, வரை, ஆக 57.
அரிசம்-மிளகு, கோபம், குரல், கழல்.
அரில்-பிணக்கம், குற்றம், சிறுதூறு, சீதளம், தெறிவு, பெருமை.
அரிதம்-திக்கு, பொன்னிறம், பச்சை நிறம்.
அரிகை-அறுகை.
அரிதல்-அறுத்தல்.
அரியது-இல்லாதது.
அரியகம் சிலம்பு.
அரிகள்-சத்துருக்கள்.
அரிவாள்-கொடுவாள்.
அரிமை-மான்.
அரியல்-கள்ளு.
அரிசனம் மஞ்சள்.



அரை-இடை, பாதி.
அரோ-அசைச்சொல்.
அரைநாள்-பாதிநாள்.
அரீனம்-மான்.
அரியணைச் செல்வன் - புத்தக் கடவுள்.
அரிதகி-கடுக்காய்.
அரைங்கம்-அழகு, நோய், மாதா, தெய்வம், ஆகாரம்.
அரிட்டம்-காக்கை, கள்ளு.
அரிசி-தண்டுலம், உரிய மரம்.
அரியம்-சோம்பு.
அருந்தவர்-ஆழ்வார்கள், அகத்தியன்.
அருள்-கிருபை, அன்பு, இராகம், கொடை.
அருணம்-சிவப்பு, பொன்மான், ஆடல், அச்சம், ஆடு, எலுமிச்சைமரம், கவசம்.
அருப்பம்-ஊர், மருதநிலத்தூர், கவலை. பிட்டு, இடும்பை, கனமுரம்பு, வழுக்கல்நிலம், செலவரியது, மோர்.
அருக்கன்-ஆதித்தன், தேனீ, அங்கல், சுருங்கல், கார்தல்.
அருச்சுனம்-மருது, வெள்ளை நிறம், அருத்தபதாகை, வேதப்பொருள்.
அருத்தம்-தனம், பொருள், பயன், பாதி.
அருவி-தினைத்தாள், மலைச்சாரலிறுறு, கழிமுகத்துவாரம்.
அருவை-துர்க்கை, பெண்.
அருந்தல்-உண்டல்.
அருளல்-கொடை.
அருணன்-ஆதித்தன், ஆதித்தன் தேர்ப்பாகன், புதன், தூதுவன்.
அருடம்-வேம்பு, கள்ளு.

அருகனை முடிதரித்தோள்-தன்ம தேவதை.
அருஞ்சிறை-நரகம், மதில்.
அருச்சனை-பூசனை.
அரும்பல்-முளைத்தல்.
அருச்சிகன்-சந்திரன்.
அருமர்-தமிழர்.
அருந்ததி-வடமீன்.
அருகர்-சமணர்.
அருமை-பெருமை, பேராண்மை.
அருமையிற்பாடல்-அகமார்க்கம்.
அருலம்-காற்று.
அரும்பு-மொட்டு.
அருகல்-குறைதல், சார்தல்.
அருக்கம்-எருக்கிலை.
அருட்பம்-மிகுதி-
அருகி-கள்ளு.
அரும்பாலை-பாலைநிலத்தியாழ்.
அருமலதி-இராகம்.
அருட்கொடி வேந்தன்- அருகக்கடவுள்.
அருகந்துதன்-வேதனை செய்வோன்.
அரும்பலம்-அனிச்சம்.
அருத்தி-ஆசை.
அலகு-பால், நெல்லின் மணி, எண், பலகறை, நுளம்பு ஆதி, பறவைகளின் மூக்கு, ஆயுதம்.
அலந்தை-நிரை, துன்பம், குளம்.
அலற்றல்-பொறுதியின்றிக் கூப்பிடல்.
அலமரல்-சுழற்றல், அச்சம், (அலமரல் தெருமரல் ஆயிரண்டும் சுழற்சி. தொல்.)
அல்லி-வெள்ளாம்பல், மான், கூத்து, பூவின் அகஇதழ், காயாமரம்.
அல்லோன்-சந்திரன்.
அல்-கலப்பை, கூர்மை, ஆதித்தன். இருள், இராத்திரி, இடைச்சொல்.
அல்லல் – தங்கல், நாள், நெல், துன்பம்.
அலர்-சந்திரன்; பலர் தூற்றுதல், மலர், தண்ணீர், பழிமொழி.
அலவன்–நண்டு, கற்கடக விராசி, ஆண்நண்டு, சந்திரன், பூனை.
அலங்கல்-தளிர், மாலை, ஒளி விடுதல், அசைதல்.
அல்கல்-வறுமை, தங்கல், சுருங்கல்.
அலை–நீர்த்திரை, கடல், வெகுளி.
அலைசல்-அலையல்.
அல்லாத்தல்-துன்பம்.
அலம்பல்-ஒலித்தல்.
அலத்தகம்-செம்பஞ்சு.
அலர்-பூ, சுரைப்பூடு.
அலம்– அமையுமென்றல், கலப்பை, இடைச்சொல், துன்பம்.
அலர்தல்-விரிதல்.
அல்லியம்-மாயனுடல்.
அலகைக்கொடியாள்-துர்க்கை, பத்திரகாளி.
அலகை-பேய், நாள்.
அல்குல்-சகனம்.
அலங்கரித்தல்-ஒப்பனைசெய்தல்.
அலாயுதன்-பலபத்திர ராமன் (பலராமர்).
அலி-பேடி, கொற்றும்பூடு.

அல்லம்-இஞ்சிப்பூடு.
அலங்காரம்-கட்டழகு
அலக்கண்-துக்கம்.
அலகண்டம்-துக்கம்.
அலவலை-புகழ்தல்.
அலவல்-நீர்நிலை, பள்ளம், கிழக்கு.
அவனி-பூமி.
அவைநீர்-வழியினதுமுறைமை, சாரியைச் சொல், சுட்டு.
அவா-விருப்பம், காடி, கஞ்சி, வேட்கைப் பெருக்கம், இறங்குதல்.
அவரோகம்-மறித்துவஞ்சல்.
அவனறல்-சாவு.
அவரை-துவரை, படர்பயிர்.
அவ்வழி-முழுதுமறியும் என்பது.
அவதாது-வெள்ளைநிறம்.
அவ்வை-மாதர், வாமனன், நெறி, வாழாது நோற்பவள்.
அவ்வியம்-மனக்கோட்டம்.
அவி-சோறு, நெருப்பு, தெய்வ உணவு, நெய்.
அவிர்-பாடஞ்செய்தல், ஒளி.
அவிர்தல்-ஒளிவிடுதல், விறல்.
அவிழ்தல்-மலர்தல்.
அவை - சபை, அறிஞர்திரள், போர்-வட்டாடு, ஆடி.
அவித்தை-மாயை.
அவையல்-திரளை.
அவைத்தல்-நெல் குத்துதல்.
அவலம்-துக்கம்.
அவையம்-உறுப்பு.
அவிநவம்-புதுமை.
அவுணர்-தகுவர், திதிபுத்திரர்.
அவிநயர்-கூத்தர்.
அவிரளம்-பெருகல்.
அவதி-அளவு.
அவற்று-உவமை
அவலித்தல்-துன்பம்.
அழனம்-உஷ்ணம்.
அழத்தல்-அளவு.
அழம்-பிணம், பேய், தீ.
அழகில்-கழுதை.
அழகு-முழவு, ஒண்மை.
அழல்-செவ்வாய், அக்கினி, வெப்பம், உஷ்ணம்.
அளகைக்கோன்-குபேரன்.
அழலவன்-ஆதித்தன்-
அழற்கண்வந்தோன்-வீரபத்திரன்.
அழியும்-ஒட்டகம்.
அழிவை-ஆணை.
அழிஞ்சில்-மரம், ஒட்டினர் மேற்சாராமை.
அமும்பு-சுவர்க்கம், சோறு.
அமுவு-நடுவு.
அழுகு-பெருமரம்.
அழுக்கு-ஆசை, குற்றம்.
அழுக்கல்-அச்சம்.
அழுங்கல்-இரங்கல், கேடு, சோம்பு, கோறல், அச்சம், ஒலி, துன்பம், ஆரவாரம், அழுந்து, ஆழநீர்.
அழுவம்-துருக்கம், வழுக்கு நிலம், பரப்பு, நாடு, பெருமை, தயிர்.
அழுக்காறு-பொறாமை.
அழுகு-அஃறிணைப்பேடை.
அளகம்-பெண்மயிர், மற்றவர், குருளை, நீர், மயிற்குழற்சி.
அளக்கர்-கடல், சேறு, கார்த்திகை நாள், பூமி, ஆழம்.
அளவர்-உப்பமைப்போர்கள்.
அள்ளல்-பிடித்தல், நரகம், சேறு.

அள்ளு-வில்லி, பற்றிரும்பு.
அள்-கூர்மை, செறிவு, வன்மை, பிடிக்க, கூலி, செறிவு.
அளறு-நரகம், சேறு.
அளவு-வரையறை, நயம், அளபெடை.
அளவை-தினம், எல்லை, அளவு.
அளவின்மை-அளவிறந்தது.
அளாவல்-கலத்தல், துழாவல்.
அளபெடை-எழுத்திசை.
அளிகம்-தண்ணீர், நெற்றி.
அளிந்தம்-கோட்டை, வாசற்றிண்ணைத்தலம்.
அளி-வண்டு, கிருபை, மது, கொடை, கீதம்.
அளித்தல்-கொடை, அன்பு, செறிதல்.
அளிதல்-கனிதல்.
அளிக்கை-கொடுத்தல்.
அளை-புற்று, தயிர், மோர்.
அற்புதம்-அதிசயம்.
அறிவின்மை-அசேதனம்.
அறிமடம்-அறிந்ததும், அறியாததும்.
அற்சனை-பூசனை.
அறகல்-கிட்டுதல்.
அற்கம்-எருக்கிலை, சுருக்கம்.
அறல்-கருமணல், வளைவு, குழல், நீர்த்திரை, நீர், இருள், சிறிய தூறு, திருநாள்.
அற்பம்-நாய், சிறுமை.
அறப்புறம்-ஓதுப்பள்ளி.
அறன்கடை-பாவம்.
அற்பி-மலையின் சாரல்.
அற்குதல்-நிறைத்தல்.
அற்கம்-நீர்க்காக்கை, எருக்கிலை.
அற்காமை-நிலையாமை.
அறத்தைக்காப்போன் - சாத்தன்.
அற்கு-ஒருக்கு.
அறம் நல்வினை.
அற்றம்-மறைவு, பொருள், சோர்வு, அவகாசம்.
அற்ற-இல்லாதது, அவாவின்மை.
அறநிலைப் பொருளாவது - நெறிவழிநின்று நெறியாலுழந்து பெறுவகைதானே.
அறநிலையறமாவது - வருணகாப்பறம் பிறழா நெறி நிலை பெறுதற் பெருளாற் பேணும் பெற்றி.
அறநிலையின்பமாவது - ஒத்த குலமு மொத்த செல்வமு மொத்த வாயுவு மத்தக வுடையது.
அற்றூர்-குறவர்.
அறவர்-துறந்தோர்.
அற்பசி-அச்சுவதி மாதம்.
அறவு-நடுத்தலம்.
அற்றே-சாரியைச் சொல்.
அறுவகைப் போக பூமி—ஆதியரிவஞ்சம், நல்லரிவஞ்சம், ஏமதவஞ்சம், இரணவஞ்சம், தேவகுருவம், உத்தரகுருவம்.
அறிஞன்-புதன்.
அறிஞர்-துறந்தோர்.
அறிவான்-புத்தக் கடவுள்.
அறிவர்-கண்ணுளர்.
அறிவழி-பெய்கள்ளு.
அறிவு-ஞானம், ஒண்மை, கொள்கை, ஆன்மா.
அறுசுவை-தித்தித்தல், புளித்தல், துவர்த்தல், கைத்தல், உவர்த்தல், கார்த்தல்.
அறுவகை யுலக நடை—அறநிலையறம், மறநிலையறம், அற

நிலைப்பொருள், மறநிலைப் பொருள், அறநிலையின்பம், மறநிலையின்பம்.

அறுவகை-அற்று விடுதல், ஆனை யாளி,

அறணடு-ஊஞ்சல்.

அறுகு-சிங்கம். ஆனை, புல், ஆனையாளி.

அறுபதம்-வண்டு, கையாந்த கரை,

அறுவகைச் சக்கரவர்த்திகள்-அரிச்சந்திரன், நளன், முசுகுந்தன், புரூரவா, சகரன், கார்த்த வீரியன்.

அறுவை-புடவை, சித்திரை நாள்.

அறுத்தல்-அரிதல்.

அறுதொழிலோர்-பார்ப்பார்.

அறுமீன்-கார்த்திகை.

அறுவாய்-கார்த்திகை நாள்.

அறுசலம்-வீணை.

அறுசமயம்-வைசேடிகம், நையாயிகம், மீமாங்கியம், ஆருகதம், பவுத்தம், உலோகாயதம்.

அறை-பாறை, பறை ஒலித்தல், வார்த்தைகெடுத்தல், புரைபோகல், செவி அறைதல், சொல்லுதல், அடித்தல், திரை, முறைஞ்சுட்போகல்.

அறைகூவல்-பொரவழைத்தல்.

அறைபோதல் - கீழறுத்தல், படையற்ற பேர்.

அறுபத்து நாலு கலையாவது-வேதம் 4, இந்திரகாசம், வேதார்த்தம், கற்பம், சந்தசு, சோதிடம், தர்க்கம்10, பாட்டம், பிரபாகரம், மீமாங்கிசம், மன்னுவாதி தருமசாத்திரம், வைசேஷிகம், சமையல் சாத்திரம், பாசுவதனம்,கடக-தனு 20, கணிதம், கந்தருவம், அத்த கேவுசல்லியம், அசுவாரோகணம், கசாரோகணம், ஆகாசகமனம், பரகாயப் பிரவேசம், அக்கினித்தம்பம், வாயுத்தம்பம், கடகத் தம்பம் 30. ஜலத்தம்பம், ஆயுள்வேதம், தனுர் வேதம், ஸ்திரீ வசியம், புருஷவசியம், இரத்தின பரீட்சை, கனகபரீட்சை, சித்திரகனம், பரிசேதனம், வீணை-40. வேணு, தண்டி, காவல், சகுனம், சாமுத்திரிகா லட்சணம், பாஷா பரிக்கிஞானம், இந்திர சாலம், பூதசாலம், மகேந்திரசாலம் 55. தந்திர விசயம், மாயாவாதம், கிரியா வாதம், நட்டாமுட்டி, சிந்தனம், உச்சாடனம், நீதிசாத்திரம், மந்திரசாத்திரம், சந்திர சாத்திரம், காம சாத்திரம், கரவட சாத்திரம், சிற்பசாத்திரம், ஆகம சாத்திரம்-ஆக 64.

அறுவகைக் குணம் - ஞானம், சக்தி, செல்வம், வீரம், பலம், அழகு.

அனல்-நெருப்பு.

அனந்தன் - சேடன், மால், சிவன், பலபத்திரராமன்.

அருகன்-இளையபெருமாள், இராமாநுசன், திருப்புளியாழ்வார்.

அனந்தம்-மயிற்சிகை, அள விறந்தது, ஆகாயம்.
அனலன்-வெள்ளி, பகவான்.
அனங்கன்-காமன்.
அனந்தலோசனன் - புத்தக் கடவுள்.
அனங்கம்-மல்லிகை.
அனந்தல்-நித்திரை.
அனந்தஞானி - புத்தக் கடவுள், பிரமன்.
அன்னம்-சோறு, ஓதிமம், குருகு, கவரிமான்.
அனலேறு-இடி.
அன்னியம்-வேறுபடுதல்.
அனமி-பால்.
அனலி-ஆதித்தன்.
அன்றலை-வாடை.
அன்னியம்-குயில்.
அன்று-முன்னாள், அல்ல என் பது, தேற்றம், ஆகும், சொல்லும்.
அன்னை-தாய்.
அன்பன்-பத்தா, தோழன்.
அன்னவம்-கடல்.
அன்றில்-ஓணம், பட்சி, மூல நாள், ஓர்புள்ளு.
அன்பு-பரிவு.
அன்-சாரியைச் சொல்.
அன்னோ-அதிசயமுற்றிரங்கல்.
அன்ன-உவமை.
அன்னே-சாரியைச் சொல்.
அனிச்சம்-அரும்பல்மரம், அனிச் சப்பூ.
அனித்தம் - சந்தனம், நிலையா மை.
அனத்தம்-பொருளில்லாமை.
அனிலம்-காற்று.
அனிகம்-திரள், படை.
அனிச்சை-.....வுதல், நாகமல்லி.
அனுக்குகம்-......தனம், பாம்பு.
அனுதி-பழைமை.
அனுமானம்-ஐயம்.
அனுக்கம்-வருத்தம்.
அனுமயன்-புத்தக் கடவுள்.
அனுலோமன்-உயர்ந்த நாலு வங்கிசத்து விதிமுறை விட்டுப் பிறந்த பிள்ளையின் பேர்.
அனுசன்-பின்பிறந்தோன்.
அனைத்து-முழுதும்.
அனைய-உவமை.
'அனு' என்று கன்னத்தின் கீழ் வாய் நாடி 'அனுமான்' என்று பேருண்டானது, கீழ்வாய் நாடியிலே வச்சி ராயுதமிட்டு இந்திரனெறி கையால் அனுமானென்று பேராயிற்று.
அனுமிகை- ... ..
அனுச்சிலன்- பிரகாசமில்லான்.

அகரம் முற்றும்

# இகரம்

இகத்தல்-கடத்தல், இறத்தல்.
இகணி-கருந்தினை.
இகரம்-சந்தனம்.
இகலினர்-சத்துரு.
இகல்-நரி, ஓரி, ஆதித்தன், சிவல், பகை, வலி, போர்.
இகந்து-கடந்து.
இகழ்வு-இகழ்ச்சி.
இக்கிரி-பறவையிலொன்று.
இகட்சி-மறப்பு.
இக்கே-சாரியைச் சொல்.
இகமில்-ஆண்டு.
இக்க-உவமை.
இகுகரை-இடிகரை.
இகுத்தல் - நெருக்கம், தாழ்த்தல், செகுத்தல், அழைத்தல், இழைத்தல், புடைத்தல், கொடை, சொரிதல், வீழ்த்தல், விரித்தல்.
இகுளை-தோழி, நட்பு, சுற்றம்.
இகுளி-இடம்.
இகுதல்-செகுத்தல், வீழ்தல்.
இகும்பை-குடம்.
இக்குக்கு-அணியம்புக்கட்டு.
இக்கு-கரும்பு, கள்ளு, இடைச் சொல்.
இகுசம் - எலுமிச்சமரம்.
இகம்-முன்னிலையசைச் சொல், அசைச் சொல், இப்பிறப்பு.
இங்கல்-தங்கல், செறிவு.
இங்கிதம்-கருத்தின் குறிப்பு.
இங்கு-பெருங்காயம்.
இங்குலிகம்-சாதிலிங்கம்.
இங்குதல்-தங்கல்.
இங்குவு - காமசூர்ணம், தருப்பணபிண்டி.
இசுமை-குடம்.
இசைத்தல்-ஒலித்தல், சொல்லுதல்.
இசை - பண், பொருந்துதல், தித்திப்பு, ஓசை, புகழ், பாட்டின்சொல்.
இசைப்பு-இசைச் சொல்லு.
இச்சை-ஆசை, பொய்த்தல்.
இடித்தல்-அஞ்ஞானம்.
இசையை-துர்க்கை.
இசங்கு-குண்டிலி எனும் மரம்.
இசித்தல்-முறித்தல்.
இஞ்சி-கோட்டை, இஞ்சிப்பூடு.
இஞ்சினம் - முன்னிலையசைச் சொல்.
இடவகை-வீடு.
இடம்பாடு-பரிவு.
இடிதல்-அறுத்தல்.
இடங்கர் - குடம், நீர்ச்சால், முதலை, தூர்த்தர்,
இடிஞ்சில்-தீபமேற்றுந் தகளி.
இடவை-வழி.
இடங்கணி-கற்பொறி.
இடங்கழி-மீதூரல், தூர்த்தர்.
இடம்புரி-சங்கு.
இடக்கர் - மறைத்துமொழிதல், கும்பம்.
இடகம் - இடாகினி, வஞ்சப் பெண், பனுவல்.
இடம்-வீடு, வழி, இடவகை, செல்வம், விசாலம்.
இடத்தல்-ஒலித்தல்.
இடபம் - எருது, மரத்தின் கொப்பு.
இடர்-துன்பம்.
இடாகினி-யோகினி.
இடல்-கொடை.
இடி-உறுதிச் சொல், இடிப்

பெயர், நென்மா, ஆந்தை, ஒலி.
இடும்பல் - அச்சம், இம்பர், இராக்கதர்.
இடும்பை-துன்பம்.
இடுக்கண்-துன்பம்.
இடையல்-நல்லாடை.
இடையர்-ஆயர்.
இடை - தனிமை, நடுத்தலம், நுசுப்பு, நிறை இடம்.
இடும்பிகொழுநன்-வீமசேனன்.
இட்டிமை-அற்பம்.
இட்டி-வேள்வி, அற்பம்
இடுதல்-எறிதல்.
இணங்கி-பாங்கி.
இணர்-பூங்கொத்து.
இணம்-நெய், கொழுப்பு.
இணக்கு-தோழி.
இண்டு-ஈங்கர்.
இண்டர் - முல்லைநிலமக்கள், ஆயர்.
இணை - இரண்டு, புணர்வு, உவமை, சகாயம், இரக்கம்.
இணையி-ஒதிப்பணிச்சை.
இண்டை-தாமரை.
இண்டமரம்-மாலை.
இணறு-தூறு.
இதியாசம்-இலக்கிய மெழுத்து தாரணப்பொருள்நடை.
இதல்-சிவற்குருவி.
இதழி-கொன்றை.
இதணம்-பரண்.
இதழ்-பூவின்தோடு, பனையிதழ், அதரம்.
இதரர்-கீழ்மக்கள்.
இதலை-கொப்பூழ்.
இதி-மெய்க்குறுதி.
இதையம்-மனம்.
இதை-மரக்கலப்பாய், புதுப் புனல், கலப்பை, மரக்கால், காராமணிப்பயறு.
இதைப்புனம்-புதியகொல்லை.
இந்தி-பூசை.
இந்திரை-திரு.
இந்திரன்-மகசிரம்.
இந்திரனுள்-கேட்டை.
இந்தளம்-தூபத்தட்டு, இராகம், எரியிடுகலன்.
இந்தனம்-விறகு.
இந்திரைக்கு மூத்தாள்-மூதேவி
இந்துருணி-புளி.
இந்து - சந்திரன், காடி, கரி, ஆனை.
இந்தீவரம்-கருங்குவளை.
இந்துளம்-கடம்புமரம், கடம்பு.
இந்திரவானம்-குவளை.
இப்பர்-செட்டிகள்.
இபம்-மரக்கோடு, ஆனை, பாகு.
இபூடிகரம்-எலி.
இமிழ்த்தல்-கட்டுதல், ஒலி.
இமிழ்-ஓசையினிமை.
இமிழ்தல்-தெவிட்டல்.
இமில்-எருத்தின் முதுகு, திரட்சி, எருது.
இமிர்தல்-நெருங்குதல்.
இமம்-பனி, பரிவேடம்.
இமை-கண், கரடி, மயில்.
இமையில்-கருடன்.
இமைத்தல்-விட்டுவிளங்கல்.
இம்மை-இப்பிறவி.
இம்பர்-இவண்.
இம்-இடைச்சொல்
இம்மி-பொன், புலம், நுண்மை.
இம்மெனல்-அனுகரண ஓசை.
இளம்பிடி-பெண்.
இமையவல்லி-உமையாள்.
இயக்கம்-பெருமை, காற்று.
இயக்கன்-நாய், இயக்கர்சாதி.

இயங்கல்-போகல்.
இயவுள்-பிள்ளை, நிருவாணி
இயவு-வழி.
இயம்-வாச்சியம், ஈயம், ஒலி, வார்த்தை.
இயவனர்-யோனகர்.
இயமான்-ஆன்மா
இயவர்-பறையர், தோற்கருவி இசைக்கும் பெயர்.
இயங்கல்-நடத்தல்.
இயலல்-திரிதல்.
இயல்பு-சாயல்,ஒழுக்கம், அழகு, குணம்.
இயக்கர்கோன்-குபேரன்.
இயை-புணர்ச்சி.
இயத்தல்-கடத்தல், தொடுத்தல்
இயற்றல்-முயற்சி.
இய்யே-சுட்டு.
இயம்பல்-சொல்லுதல், ஓசை.
இயா-முன்னிலையசைச் சொல்.
இயக்கி-அருகனை முடிதரித்தோள்.
இயக்குரோதம் - ஆலமரம், ......நாண், இனிமை, கடைக்கொள்ளி,
இரக்கன்-ஈரங்கொல்லி.
இரைத்தல்-ஒலித்தல்.
இரப்பு-வறுமை.
இரச்சை-கயிறு.
இரசனி-இராத்திரி.
இரந்திரி-இத்திமரம்.
இரசதம்-வெள்ளி.
இரதம்-பொன், தேர், பெரும் பாம்பு.
இரதனம்-கிண்கிணி, அரை நாண்.
இரதிபதி-காமன்.
இரத்தி-இலந்தை, மருது.
இரத்தம்-உதிரம்.



இரற்றல்-ஒலித்தல்.
இரசகம்-கருணை, துன்பம், ஒலி.
இரவலர்-இரப்போர்.
இரவு-இரத்தல், இராத்திரி.
இரவோர்- இரப்பவர்.
இரிதல்-காய்தல், ஓடல்.
இரலை-மான்ஏறு, புல்வாய், ஊதுகொம்பு, அச்சுவதி, இரண்டு மிருகத்தினுண் பால்.
இரல்-ஏரல்.
இராசீவம்-தாமரை.
இரணி-பன்றி.
இரங்கல்-ஒலி, அழுங்கல்.
இரணம்-பூசல். கடல், பொன், பாம்பு.
இரணியம்-பொன்.
இரணியகர்ப்பன்-பிரமா.
இரட்டம்-தேசம், கழுதை.
இரையம்-பலபண்டம்.
இரை-விலங்குணவு, ஒலி.
இராவணம்-விளக்கு.
இராசிலம்-சாரைப்பாம்பு.
இராவதம்-பிறவு, இரேணு, பரிமளம், மலர்த்தூள்.
இராகம்-கீதம், செம்மை, இசை, நிறம்.
இராதம்-கடைக் கொள்ளி.
இராசமாக்கு-மலைப்பாம்பு.
இரவரவு-வசைபாடுதல்.
இராசியம்-மறைவு, யோனி.
இராசி-திரள்.
இராமம்-ஆசை, அழகு.
இரிஞர்-சத்துரு.
இரவி-ஆதித்தன், மலை.
இரேபதி-வாணிகம்.
இரிதல்-பிறகிடல்.
இரவோன்-சந்திரன்.
இராக்கதிர்-சந்திரன்.

இரதி-இந்திராணி, ஆனை மதம், பித்தனை, ஆசை, மதன் தேவி, வேட்கைப் பெருக்கம்.
இரட்டை-மிதுனம், இரண்டு.
இரண்டாம் வேதம்-தயித்திரியம், எசுர்.
இராமக்கிரியை-இராகம்
இராசதகுணம்-தானம், தவம், தருமம்பேணல், ஞானம், கல்வி, நலனிவைதெரிதல்.
இரேவதி-பலபத்திரராமன் மனைவி, கடைநாள்.
இருள்-இருட்டு, ஆனை கனைத்தல், நீலநிறம், அரவம், நரகம், மயக்கம், கருமை
இருசு-வண்டியுளிரும்பு, செவ்வை.
இருள் வலி-ஆதித்தன்.
இருணம்-உவர்நிலம்.
இருப்பை-பாம்பு, ஒருமரம்.
இருங்குடி-கொடைக் கீர்த்தி, மானியம், பாலை.
இருணிலம்-நரகம்
இருத்தி-செல்வம்
இருவி-தாள்வு, தினைத்தாள்.
இருளி-பன்றி.
இருடி-ஆந்தை, முனி.
இரும்பாழி-ஊர்.
இருக்கு-முதல்வேதம், வேதப் பொதுப் பெயர்.
இருந்தை-கரி.
இருமை-பெருமை, இம்மை, மறுமை.
இருந்துரு-பெருச்சாளி
இருவகைக் கந்தம்-நற்கந்தம், துர்க்கந்தம்.
இருபாற்பொருள்-வேதம் கல்வி, செல்வப்பொருள்.
இருவகையறம்-இல்லறம், துறவறம்.
இருவினை–நல்வினை, தீவினை.
இருவகைத்தோற்றம்-சராசரம்.
இருசுடர்-சந்திர சூரியர்.
இருமரபு-தாய்வழி, தந்தைவழி.
இருவகையின்பம்-இல்லதும், உள்ளதும்.
இருவகை வீடு-பற்றுவீடு, பொருள்வீடு.
இருநிதிக்கிழவன்–குபேரன்.
இருநிதி-சங்கநிதி, பதுமநிதி.
இலம்பகம்-நுதலிலணிமாலை, அத்தியாயம், நூன்முடி.
இலம்பாடு-துக்கம், வறுமை.
இலஞ்சி-மகிழமரம், கொப்பூழ், அகில், புன்கு, வாவி, கோட்டை.
இலஞ்சம்-கொப்பூழ்.
இலச்சை-மானிபம், (வெட்கம்).
இலங்கை-ஆற்றிடைக்குறை, அளகை, இலவம்பஞ்சு, பூளை.
இலங்கிகள்-துறந்தோர், தவத்தியர்.
இலங்கல்-அழுங்கல், அழுங்குதல்.
இலிங்கம்-ஆண்குறி, அடையாளம்.
இலிர்த்தம்-தளிர்த்தல்.
இலதை-கோற்கொடி, வள்ளிக்கொடி.
இலச்சினை-மோதிரம்.
இலத்தை-கிருபை.
இலகு-அகில், எழுத்து, நொய்ம்மை, ஒளி.
இலக்கியம்-உதாரணமெடுத்துக்காட்டுவது.
இலவந்திகை-இயந்திரவாவி.

இலட்டுகம் - தோசை, பணியாரம்.
இலட்டு-அப்பம்.
இலாங்கலி-தென்னமரம், செங்காந்தள்.
இலாளி-குதிரைவாய்நீர்.
இலாடு-குதிரை.
இலாயம்-குதிரைப்பந்தி.
இலாடம்-நெற்றி.
இல்லாள் - பாரியை, மருதத் தலைவி, முல்லைத் தலைவி.
இல்லவள்-மனையாள்.
இலக்கர்-துகில்.
இலக்கம்-இருப்பிடம், வளரொளி, தொகை.
இலையுதிர்-முதுகாடு.
இலை-மரத்திலை, தகடு.
இலையம் - கூத்து, பேயம் வாழை, கூத்தின்விகற்பம்
இலேகர்-தேவர்கள்.
இலேகை-எழுத்து.
இலேசம் - சிறுமை, காலவிரைவு.
இல் - வீடு, மனையாள், இல்லாமை, இடம், இராசி, சாவு, இடைச்சொல்.
இரவு-சாரியைச்சொல், புலி.
இல்லம்-தேற்றான்மரம், வீடு.
இல்லோன்-மிடியன்.
இலைக்கொடி-வெற்றிலை.
இலகடம்-ஆனைமேல் தவிசு.
இல்லல்-நடத்தல்.
இவர்தல்-செறிவு, விளங்குதல். விருப்பம், ஏறுதல், எழுச்சி, நடத்தல்.
இவற்றல்-சாதித்தல்.
இவவு-வழி, காடு, ஊர்.
இவறல் - ஆசை, ஆசைப் பெருக்கம், மறலி (மறதி).
இவண்-இம்பர்.
இவமை-குற்றம், ஆடு, கருமை, கொண்டல்.
இவுளி-குதிரை.
இவையே - வீற்றிருத்தல், ஐயுற்றசொல்.
இழிஞர்-சண்டாளர்.
இழிவு-[ *].
இழா-இழுக்காமை.
இழமை-மயக்கம்.
இழுதன்-பேதை, மூடன்.
இழுது-நெய், நிணம்
இழுமெனல்-இனிமை, அனுகரணவோசை.
இழுக்கல்-தளர்தல்.
இழித்தல்-ஒலித்தல்.
இழைத்தல்-ஆய்தல், மாற்றம், நினைத்தல், கூற்றம், செய்தல்.
இழவு-அழுகை.
இழை-நூல், ஆபரணப் பொதுப்பெயர், கூட்டம்.
இழிதல்-இறங்கல்.
இழுதை-அறிவிலோன்.
இளமை-தன்மை, காமம், மயக்கம், வாலிபம்.
இளவல்-பின்பிறந்தோன்.
இளம்பி-பெண்பேய்.
இளவு-தளர்ச்சி
இளக்கம்-இரக்கம்.
இளங்கோக்கள்-செட்டியார்
இளி-இசை, இசித்தலொன்றே, இணங்குதல், உரித்தல், சிரிப்பு, இகழ்ச்சி.
இளிவு-இழிதகவு.
இளைத்தல்-கட்டல்
இளை-பசு, பூமி, கிடங்கு, காவற்காடு, அங்காடி, புயல், தலைக்காவல், வேலி, இளமை.

இளையன்-தலைக்காவல்.
இறல்-ஏரல் (கிளிஞ்சல்).
இறங்கல்-குடம், ஆழங்கால்.
இறப்பு-இல்லினிறப்பு, சாவு, மிகுதி.
இறலி-இத்திமரம்.
இறவுளர்-குறவர்.
இறடி-கருந்தினை.
இறவை-ஏணி, இறைகூடை.
இறஞ்சல்-தெண்டன்.
இறை-கடமை, இராசா, சுவாமி, அற்பம், தாமரை மலர், தங்கல்.
இறவு-இருல்மீன்.
இறகு - மயிற்பீலி,
இறைமையாட்டி - தலைவி.
இறலி-மருதமரம்.
இறத்தல்-சாதல், நடத்தல்.
இற்புலி-பூனை.
இருல் - தேன்கூடு, தாமரை, இருட்டு, மீன், கார்த்திகை நாள், எருது, இடபராசி.
இறும்பு-காடு, தூறு, பரம்பு, மலை, இடை, சிறுமலை.
இறுங்கு-சோளம்.
இறும்பூது-குழைதகையைய, சிறுதூறு, மலை, அதிசயம், காந்தட்பூ, தாமரை.
இறுத்தல்-தங்கல், சொல்லுதல், கெடு, தாழ்தல், முறித்தல், ஒசித்தல்.
இறுமாப்பு-ஏக்கழுத்தம்.
இறுக்கர்-பாலை நிலமாக்கள்.
இறப்பு-குடியிறை.
இறஞ்சி-மரவுரி.
இறை-முன்கை, கடவுள், சிறுமை, தாய்தகப்பன், புள்ளிறகு, சென்னி, விரைவு, விட்டில், தங்கல், உயர்ந்தோர், பிரமா, எல்லாமுடையோன்.
இறை-இறைவன்.
இறைவன்-இராசா, கடவுள், மூத்தோர், குறிஞ்சித் தலைவன்.
இறையுளர்-குறிஞ்சிநிலமக்கள்.
இறுதி-ஒடுக்கம்.
இனம்-மாணிக்கம், கொவ்வையங்கனி, கிளை, அமைச்சு.
இனன்-ஆதித்தன், உவமை.
இன்னல்-துன்பம்.
இன்னியர்-பாணர்.
இன்னியை-இனிமையாகிய வாச்சியம்.
இன்னிசைக்காரர்-பாணர்.
இன்றை-மலை.
இன்பம்-அகமகிழ்ச்சி, நயம்.
இன்று-இல்லை, ஆகும்.
இன்மை-வறுமை.
இனி - இவ்விடமிக்காலமென்னும் இடைச்சொல்.
இனிசு-சோறு.
இனிக [ம * ]-படை.
இனிக்கு-எழுத்து.
இன்னார்-சத்துரு.
இனைதல்-இரங்குதல்.
இன்னுங்கு-துன்பம்.
இன்னே-சாரியைச்சொல்.
இன்-அஞ்சாம்வேற்றுமை, இனிமை.

இகரம் முற்றும்

# உகரம்

உகளம்-இரண்டு.
உகமல்–பாய்தல்.
உகழுதல்-தாண்டல்.
உக்காரி-அப்பம்.
உகப்பு-மேடு.
உக்கிரன்-வீரபத்திரன்.
உகிர்-நகம்.
உகினி-புளி.
உக்கம்-ஆலவட்டம், ஆனேறு.
உக்கலை-மருங்கின் பக்கம்.
உகளை-புறமயிர்.
உக்கில்-வயிறு.
உக்கிரம்–கொடுமை.
உகுத்தல்-தாவல்.
உக்கி-கெடு.
உச்சம்-உயர்ச்சி, வல்லிசை.
உச்சி–சந்தி, தலை, மத்தியானப் பொழுது.
உச்சிட்டம்-எச்சில்.
உஞ்ஞை-காஞ்சிமரம்.
உஞற்று-முயற்சி, மனவெழுச்சி சோர்வுறு, வழு[க்]கு.
உஞ்சல்-பிழைத்தல், ஊஞ்சல்.
உடன்-அருக . . . ம்.
உடல்-மெய், பொருள்.
உடம்பிடி-வேலெனும் ஆயுதம்.
உடற்குறை-பேய்.
உடனில்–கோபம், பூசல்.
உடைதல்-சாய்தல்.
உடலுதல்-பூசல்.
உ்கல்-இலச்சை, அச்சம்.
உடம்பு-தேகம்.
உடைகுளம்-பூராடம்.
உடை - வேலமரம், துகில், குடை, செல்வம், காத்தல்.
உடும்பை-மரம்.
உடுப்பை-மரம்.
உடமிடுக்கு-அச்சம்.
உடு-கிடங்கு, பகழி, நட்சத் திரம், கோல், அம்பிலீர்க்கு, சிறகு[ண] அகழ் ஆடு, காய்.
உடுபதி-சந்திரன்.
உடுக்கை–தண்ணுமை, வாச்சி யம்.
உணவை-கணக்கமரம்.
உணா-சோறு, பெ்ாசிப்பு, தெய்வவுணவு.
உண்டி-அருந்தல், விலங்குணவு, சோறு.
உண்டல்-அருந்தல்.
உணராமை-மயக்கம்.
உணர்தல்-ஊடல்தீர்தல்.
உண்டாட்டு - மகளிர் விளை யாட்டு.
உண்டை-படைஉறுப்பு, திரள், வடிவு, குளியம்.
உணர்வு - அறிவு, தெளிவு, நீங்கல், ஒளிதல்.
உவமை-இடையீடு.
உணவு-சோறு, பறவையூண்.
உணங்கல்-புழுங்கல்.
உண்மை-சத்தியம், உண்டாகப் பட்டது.
உத்தரி-கோணம், குதிரை.
உத்துங்கம்-உயர்ச்சி.
உதள்-வெள்ளாட்டேறு.
உதிரன்-செவ்வாய்.
உதாசனன்-அங்கி, கண்கொத் திப்பாம்பு.
உததி-சமுத்திரம்.
உத்தி - பாம்பின் படப்பொறி, செந்திருவுறுப்பு, சுணங்கு.
உதாரம்-கொடை.
உத்தியானம்-நந்தவனம்.

உத்தரம்-வடதிசை.
உதவல்-உதவி, கொடை.
உத்தரிகம்-ஏகாசம்,(மேலாடை)
உதைத்தல்-தூண்டல், மிதித்தல், அத்தது.
உத்தமாங்கம்-தலை.
உதிட்டிரன்-தன்மபுத்திரன்.
உதும்பரம்-செம்பு.
உதண்டம்-மொட்டம்பு.
உத்தியோகம்-முயற்சி.
உதகம்-நீர், மேகம்.
உதைப்பு-அத்தது.
உதரம்-வயிறு.
உதடு-அதரம், மேடராசி.
உதி-கல்வி, தோற்றம், மரம், துருத்தி.
உத்தமதானம்-குற்றமூன்றறுத்தோர்க்குள்ளம் உவந்தீவது.
உந்தி-தேர்த்தட்டு, கொப்பூழ், ஆற்றிடைக்குறை, யாழ்க்கண், ஆறு, தேருருள், நீர்ச்சுழி, சமுத்திரம்.
உபலம்-சிறுகல்.
உபநிடதம்-வேதத்தினுட் பொருளினுட்பம்.
உபாயம்-நல்வினையில் செலுத்தும் புத்தி.
உபதாரம்-தியாகம், சனம், ஆசைச்சொல்.
உபையம்-இரண்டு.
உப்பு-கடல், மெல்லியலாராடல், உவர், இனிமை.
உபாத்தி-ஆசாரியன்.
உபவனம்-ஊர்சூழ்சோலை.
உபதாகினி-படை.
உப்பிதம்-கூத்தின் விகற்பம், கிலேசம்.
உபலாளனம்-தூய்மை.
உம்பல்-வழித்தோன்றல், ஆணை, நற்குலன், எழுச்சி, உதவி செய் தினத்தைக் காக்கும் யானை.
உம்மை-கழிந்தபிறப்பு.
உமிழல்-தெவிட்டல், கக்குதல்.
உமை-பார்வதி.
உமணர்-உப்பளவர்.
உம்மே-இடைச்சொல்,
உமைமகன் - வீரபத்திரன், கணபதி, சுப்பிரமணியன்.
உம்பர்-மேலிடம், தேவர், மேல் வருவது, உயர்ச்சி.
உம்பமல்-உள்ளின் மாசு.
உற்கம்-அனற்றிரள்.
உயர்வு-கருதல், துணை, வருத்தம், தீர்தல், உயர்ச்சி.
உயிர்ப்பு-காற்று.
உயிர்-காற்று, ஆன்மா.
உய்யானம்-நந்தவனம்.
உயுத்தம்-போர்.
உயர்நிலை-தெய்வலோகம்.
உயர்ச்சி-உயர்வு.
உயர்தல்-நீளம்.
உ............—பொலிவு.
உயங்கல்-வருத்தம்.
உயிர்த்தல் - வருத்தந்தீர்தல், விடுத்தல்.
உயர்த்தல்-பொதுவாய், விடல், செலுத்தல், அனல், சீதம், வாதம், அசனி, புனல், ஆயுதம், விடம், மருந்து, பசி, சாபம், பிணி, உணவருமை.
உயிர்நிலை - உடம்பு.
உரோகம்-நோய்.
உரோமம்-புறமயிர், செறிந்த மயிர்.
உரற்றல்-ஆரவாரம்.
உரப்பல்-சீறிச்சொல்லுதல்.

உரகம்-பாம்பு.
உரால்-பெருத்தகோபம்.
உரன்-அறிவு.
உரம்-மார்பு, வலி, அறிவு, உள்ளத்தின் மிகுதி.
உரவோர்-மூத்தோர்.
உரோதனம்-அழுங்கல்.
உரை-சொல், தேய்வு, பொன்றல்.
உரோசல்-போதல்.
உரிவை-தோல்.
உரியோன்-பத்தா, உரித்தோர்.
உரை-ஒலி, சொல்.
உரிமை-விதி.
உரைத்தல்-ஒலித்தல், உரிஞ்சல், போதல், தேய்த்தல்.
உரிப்பிரியை-இலட்சுமி.
உருப்பு-வெப்பு.
உருத்தல் - தோன்றல், பெருங் கோபம், முளைத்தல், மிகுதி.
உருளி-தேர்வண்டில்.
உருள்-சாடு, உரோகணி, தேர்வண்டில், சாடினுட் பண்டி.
உருங்கல்-அழிதல், கேடு.
உரும்-அச்சம்.
உருப்பம்-வெப்பம், உட்டணம்.
உருபு-வேற்றுமை.
உருமேறு-இடி.
உருமம்-உட்டணம்.
உரு-இடி, ஆடு, நிறம், அட்டை, இடபம்.
உருவாரம்-வெள்ளரிப்பூடு.
உருமை-மனையாள்.
உருபு-அச்சம்.
உருவம்-தேகம், வடிவம்.
உருத்திரபஞ்சமம்-இராகம்.
உருவகம் - விதைத்ததெல்லாம் உண்டாகப்பட்டதலம்.
உலவை - மரத்தின் கோடு, விலங்கின் கொம்பு, காற்று, மரத்தின் கொம்பு, ஓர்மரம்.
உலங்கு-கொசுகு.
உலருதல்-காய்தல்.
உலகு இறை-சுங்கம்.
உலதை-சிலந்தி.
உல்லல்-ஊடல்தீர்தல்.
உலண்டு-கோற்புழு.
உலப்பு-கெடுதல்.
உலகம்-திக்கு, புவனம், பூமி, உயர்ந்தோர், விசும்பு, உயர் குணம்.
உலம்-திரள்தல், துன்பம்.
உலத்தம்-சாதல்.
உலம்பல்-ஆரவாரம்.
உலக்கை-திருவோணம், ஓங்கல்.
உலோசனம்-கண்.
உலா-ஆனை, பிறபாரம், பவனி, அசைதல்.
உலாமரம்-பூவாது காய்க்கும் மரம்.
உலோகம்-பொன், வெள்ளி, செம்பு, தராம் (இரும்பு), ஈயம், வெண்கலம்.
உலோகிதம்-சிவந்தநிறம்.
உலூகம் - கோட்டான், குருவி, சிம்பி.
உல்லாபன் - நோயுற்றொழிந் தோன்.
உலைதல் - அச்சம், அழிதல், வேதனை.
உல்லியர்-கூவநூலோர்.
உல்லாபம்-குதலைச் சொல்.
உவணன்-கருடன்.
உவணம்-கருடன், உறுசிறைக் கழுகு.
உவரி-கடல்.
உவ . . . . . . சன . . . . ம்.
உவளகம்-குளம், குட்டை, ஆழ நீர்.

உவணம்-உயர்ச்சி.
உவர்-கரம்பைமண்.
உவர்ப்பு-அவாவின்மை.
உவனி-வாள்.
உவனித்தல்-வாய்மை.
உவமை-கருத்து, ஒப்பு.
உவளல்-துவளல்.
உவ்வி-தலை.
உவறல்-காய்தல்.
உவா-ஆனை, கடல், இளையோன், அமாவாசை.
உவதி-தங்கி.
உவணை-தேவலோகம்.
உவதை-அருவி, சந்தோஷம்.
உவனி-வாள்.
உவ்வு-தவம், சுட்டு.
உழத்தல்-சிரமம்.
உழக்கல்-உழக்குதல்.
உழப்பு-முயற்சி, வலி.
உழத்தியர்-மருதநில மகளிர்.
உழிஞை-சிறுபூழை.
உழி-இடப்பெயர், பக்கம்.
உழிதரல்-திரிதல்.
உழுவல்-விதிப்படிவாரா நின்றது, தொடர்ந்த அன்பு.
உழையோர்-நூல்வல்லோர், அமைச்சர், வேலைசெய்வோர்.
உழவர்-சூத்திரர்.
உழை-இடம், ஆண்மயிர், புறமயிர், மான், எழுவகை, ஓசையிலோர் விகற்பம்.
உழுவை-புலி.
உழுபடை-கலப்பை.
உள்ளார்-சத்துருக்கள்.
உள்ளன்-நரி.
உளி-இடம்.
உள்ளுதல்-நினைத்தல்.

உள்-வீடு, இடவகை.
உளர்தல் - சிதறல், நட்டல், போரொலி.
உள்ளாளம்-கூத்துவிகற்பம்.
உளை-பரிமீது கட்டுமயிர், புறமயிர், ஓசை, ஆண்மயிர்.
உளம்-மனம்.
உள்ளியம்-கரடி.
உளு-எறும்பு, தவளை.
உளிஞை-சிறுபூளை.
உளியம்-கரடி.
உள்ளம்-கருத்து, நெஞ்சு.
உள்ளல் - கருத்து, உள்ளான் பேர் (உள்ளான்குருவி).
உளைத்தல்-அழைத்தல், ஓசை.
உறழ்தல்-செறிவு, வெருவல், பெருகல், ஒத்தல், பகைத்தல், உவமை.
உறழ்-இடையீடு, உணர்வு, ஒத்து, செறிவு, பகை, உவமை, ஒப்பு, காலம்.
உற்பலம்-செங்கழுநீர்.
உறைப்பு-கொடுமை.
உறவி-ஊற்றுநீர், உறவு, எறும்பு, உயிர், உலக்களம்.
உறவு-பந்துக்கள்.
உற்கை - விண்விழுங்கொள்ளி, நட்சத்திரம்.
உறு-குதித்தல்.
உறுக்கல்-மிகுத்தல்.
உறுகண்-துன்பம், நோய், பயத்தினோடே தொடர் பிணி.
உறுப்பு - தேகம், அவையவம், மரக்கொப்பு, பாலைநிலத்து யாழ்.
உறை-நீர், முதலாந்துளி, மருந்து, நோய்நீக்கியின்

